ஸ்ரீ ஆதிசங்கரர் அருளிய

# ஆனந்தலஹரீ



பப்ளிஷர்ஸ் :

கிரி ப்ரஸ்,

திருவல்லிக்கேணி, சென்னை.

## எமது சொந்த ப்ரசுரங்கள்

——:※:——

(நாகரம், தமிழ் லிபிகளில் ஸ்லோகங்களும் ப்ரதிபத அர்த்தத்துடனும் விரிவான தாத்பர்யத்துடனும் கூடியது.)

| | | | ரூ. பை. |
|---|---|---|---|
| 1. | ஸௌந்தர்யலஹரீ | .... | 7 50 |
| 2. | சிவானந்தலஹரீ | .... | 6 00 |
| 3. | ஸௌந்தர்யலஹரீ (பாராயணத்திற்கு உரியது, நாகரம், தமிழ் மூலம் மட்டும்) | .... | 0 50 |
| 4. | ஸ்ரீ சுப்ரஹ்மண்ய புஜங்கம் | .... | 1 50 |
| 5. | மனீஷாபஞ்சகம் | .... | 0 75 |
| 6. | கணேச பஞ்சரத்னம் | .... | 0 30 |
| 7. | கனகதாரா ஸ்தோத்ரம் (அச்சில்) | .... | 0 50 |
| 8. | ஸ்ரீ அம்பா பஞ்சரத்னம் | ... | 0 37 |
| 9. | ஸ்ரீ த்ரிபுரஸுந்தரி ஸ்தோத்ரம் | ... | 0 50 |
| 10. | ஸ்ரீ துர்கா ஸ்தோத்ரம் | .... | 1 50 |
| 11. | ஸ்ரீ லலிதா அஷ்டோத்ர சதநாம ஸ்தோத்ரம் (விரிவான உரையுடன்) | | 0 50 |
| 12. | மஹிஷமர்தினி ஸ்தவம் | ... | 1 00 |
| 13. | சாரதாபுஜங்க ப்ரயாதாஷ்டகம் | ... | 0 50 |
| 14. | கௌரீ தசகம் | ... | 0 50 |
| 15. | லலிதா பஞ்சரத்னம் | ... | 0 25 |
| 16. | ஸ்ரீ சிவகவச ஸ்தோத்ரம் | ... | 0 62 |
| 17. | ஸ்ரீ லக்ஷ்மீந்ருஸிம்ஹ ஸ்தோத்ரம் | ... | 0 60 |
| 18. | ஸ்ரீ சிவ பஞ்சாக்ஷர ஸ்தோத்ரம் | ... | 0 19 |
| 19. | ஹனுமத்பஞ்சரத்னம் | ... | 0 25 |
| 20. | சங்கர விஜயம் | .... | 0 40 |
| 21. | மீனாக்ஷிபஞ்சதசீ ஸ்தோத்ரம் | ... | 0 25 |
| 22. | ஸப்த ஸ்துதி | ... | 0 31 |

கிரி ப்ரஸ், திருவல்லிக்கேணி, சென்னை-5.

ஸ்ரீராம ஜயம்

श्रीः

अभिनवद्राविडानुवादसहिता
श्रीशंकरभगवत्पादैर्विरचिता

# ॥ आनन्दलहरी ॥

ஸ்ரீ

ஸ்ரீ சங்கரபகவத்பாதர்கள் அருளிய

# ஆனந்தலஹரீ

**ஸ்ரீ வே. நாராயணன்**, எம்.ஏ., எம்.எல்.
செய்த தாத்பர்ய தமிழ் ப்ரதிபதங்களுடன்

ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்யவர்ய ஸ்ரீ ஜகத்குரு
ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதிகளான ஸ்ரீ சந்த்ர
சேகரேந்த்ர ஸரஸ்வதி ஸ்ரீசங்கராச்சார்ய ஸ்வாமிகள் அருளிய
திவ்ய ஸ்ரீமுகத்துடனும்

**கிரி ப்ரஸ், பப்ளிஷர்ஸ்,**
திருவல்லிக்கேணி : : சென்னை.

श्रीः

मुद्रा

श्रीमत्परमहंस - परिव्राजकाचार्यवर्य - श्रीमच्छंकरभगवत्पाद-प्रतिष्ठित - श्रीकाञ्ची कामकोटिपीठाधिपति - जगद्गुरु - श्रीमच्चन्द्र शेखरेन्द्र - सरस्वती श्रीपादैः क्रियते नारायणस्मृतिः ॥

इष्टसिध्द्यै भक्तिमार्गावलम्बनतत्परेष्वधिकारिष्वनुकम्पया श्रीमत् भगवत्पादानुगृहीतस्य आनन्दलहर्याख्य श्रीजगन्मातृगिरिजास्तवस्य पदवाक्यार्थ भाषाविवरणेन साकं श्रीगिरिमुद्रणालये मुद्राप्य प्रकाशितस्यास्तत्सन्निधावुपहृतस्य श्रवणपारायणादिना तां इमां हैमवती मनन्यचेतसस्सदा समाराधयन्तो विधूतपापाः प्रशान्तनैसर्गिकचित्त चाञ्चल्यदोषाः भक्ताग्रेसराः तत्तादृश श्रीभगवत्पादग्रन्थ प्रचारेण भक्तलोकस्योप कुर्वन्तो गिरिमुद्रणालयाधिकारिणश्च सर्वमङ्गलाया जगदेकमातुः श्रीभगवत्पादानां च कृपया वाञ्छासमधिकं श्रेय समधिगच्छन्त्वित्या शास्महे ॥

प्रकृतविजयात्रास्थानम् श्रीमध्यार्जुनम् ।
श्रीशा०शाके १८७२ विरोधिसं०ज्येष्ठशु०अष्टमी ॥ } नारायण स्मृतिः

ஸ்ரீ:

# முத்ரா

ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்யவர்ய ஸ்ரீமத் சங்கர பகவத்பாத ப்ரதிஷ்டித ஸ்ரீ காஞ்சீ காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீமச் சந்த்ரசேகரேந்த்ர ஸரஸ்வதீ ஸ்ரீ பாதை: க்ரியதே நாராயண ஸ்ம்ருதி: (ஸ்ரீபாதர்களால் நாராயண ஸ்மரணம் செய்யப்பெறுகின்றது.)

விரும்பியவற்றைப் பெறுதற்பொருட்டு பக்திநெறியைக் கைப்பிடித்து ஊக்கமுடன் முயலும் அதிகாரிகளுக்காக தயை கூர்ந்து ஸ்ரீபகவத்பாதர்கள் அருளிச்செய்த ஸ்ரீஜகன்மாதாவான கிரிஜையின் ஸ்தவத்தை தமிழிலே பதவுரை பொழிப்புரைகளோடு ஸ்ரீ கிரி அச்சுக்கூடத்திலே அச்சிட்டு வெளிப்படுத்தி எம்முடைய முன்னிலையிலே சமர்ப்பிக்கப்பெற்ற **ஆனந்தலஹரி** என்னும் நூலை கேட்டல் கற்றல் முதலியவற்றாலே (ச்ருதிப்ரஸித்த பெற்ற) அந்த உமை யென்னும் ஹைமவதியை வேறுபடாத சித்தத்தோடு எப்பொழுதும் நன்கு ஆராதித்துப் பாபங்களைப் போக்கிக் கொண்டவர்களாய், சித்தத்திற்கு இயற்கையாயுள்ள சஞ்சல தோஷம் நீங்கிப் பக்தருட் சிறந்தவர்களாவோர்களும் அப்பேர்ப்பட்ட ஸ்ரீபகவத்பாதர்களுடைய நூல்களைப் பிரசாரஞ்செய்து பக்த ஜனங்களுக்கு உபகாரிகளான கிரி அச்சுக்கூடத்து அதிகாரிகளும் ஸர்வமங்களையான ஜகத்திற்குத் தனித்தாயும் ஸ்ரீபகவத்பாதர்களுமாகிய இவருடைய கிருபையாலே விரும்பியவற்றிற்கு அதிகமாகவே பெருநலம் பெறுவாராக என்று ஆசி கூறுகின்றோம்.

| | |
|---|---|
| தற்காலவிஜய யாத்திரைத்தலம்<br>ஸ்ரீமத்யார்ஜுனம்<br>(திருவிடைமருதூர்)<br>ஸ்ரீ[illegible]கே 1872<br>விரோதி ஜ்யேஷ்டாஷ்டமி | நாராயண ஸ்ம்ருதி: |

ஸ்ரீ:

ஸ்ரீமாதா ஶரணம்.

ஶிவாப்யாம் நம:

முதற்பதிப்பிலுள்ள

# முன்னுரை.

---

"எந்த தேவியின் கிருபையைக்கொண்டு பிரளய காரணனான பரமேஶ்வரனும் நீலகண்டனாய் ஜகத் ரக்ஷகன் ஆனானோ, எந்த தேவியின் நிர்மால்யத்தையும் திருமஞ்சன நீரையுங்கொண்டு ஸ்ருஷ்டி கர்த்தா சிறந்த ஸ்ருஷ்டிகளைச் செய்தானோ; எந்த தேவியின் திருமாளிகை முற்றத்திலே, முகுந்தன், இந்த்ரன் முதலியவர்கள் ஸேவை செய்யக் காத்திருக்கிறார்களோ, அந்த உமாதேவியை, உல்லாஸமாகத் தோழிகளோடு தாமரைத் தடாகத்திலே நீராடுவதாகத் தியானித்து, ஸம்ஸார தாபங்களை எல்லாம் போக்கிக்கொள்ளுங்கள்" என்று உபதேசித்து, அந்த தேவியினுடைய கடைக்கண்ணோக்கத்தைப் பெற்று அத்வைத சாஸ்திரத்தை ஸ்தாபித்த ஸ்ரீ சங்கர பகவத்பாதர்கள் ஆனந்த அலைகள் மோதுகின்ற இந்த இருபது ஶ்லோகங்களால் அந்த தேவியை ஸ்துதி செய்து காட்டுகிறார்கள்.

कृपावलोको नगकन्यकाया: करोतु मे निर्मलमन्तरङ्गम् ।
येनाङ्कित: शङ्कर एकतत्त्वं विश्व लुलोके जगते जगौ च ॥

—उमासहस्रे (13, 3)

ஸுப்ரபா, மரேஸ் கேட் ரோடு,
ஆழ்வார்பேட்டை. சென்னை-18.
20—9—1943

வே. நாராயணன்.

# முகவுரை

சிவபிரானுடைய பக்கத்திலே, நித்தியப்பொருளான அவருடைய தருமபத்தினியாக அவருடைய இடது பாகத்திலே அமர்ந்திருப்பவளே! உன்னைத் துதிக்கும் வேதங்களாலும் உனக்கு ஏவல் புரியும் தேவர்களாலும் நேரே காணமுடியாததாய் உன்னுடைய நாதனுடைய கண்களுக்கே புலப்படுகின்ற உன்னுடைய திருமேனியை நான் எப்படிக் காண்பேன்? ஒருவேளை நீ என்மீது கிருபைகூர்ந்து என் கண்முன் தோன்றினாலும், அவ்வழகுச் சோதியைக் காண கூசுகின்ற என் கண்களுக்கு, வெற்றிலையாற் சிவந்திருப்பதாலே உன் வாயிதழ்களும், மை தீட்டியதாலே உன் திருக்கண்களும், குங்குமப் பொட்டாலே உன் திருநெற்றியும், முத்தாரங்களாலே உன் கழுத்தும், பொன்னுடையாலே உன் இடையும், அருவிபோற் பாய்கின்ற மந்தார மாலையாலே உன் கொங்கைத் தலங்களும், அசைகின்ற திருகுண்டலங்களாலே உன் மார்பிலே சார்த்திக்கொண்ட வீணையின் நாதத்தை எழுப்பி உற்றுக் கேட்கும்போது சிறிது ஒருக்களித்த உன் திருமுகமும் தோன்றுவதால், உன் திருமேனியின் பிரகாரத்தை ஒருவாறு ஊகித்தறிய வேண்டியிருக்கிறது. படிச்சோதியாடையோடு பல்கலனாய் உன் கடிச்சோதி கலந்துள்ளது. இன்னொலி செய்கின்ற நூபுரங்களைக் கொண்டே உன் திருவடிச் சோதியிலே மனத்தைச் செலுத்த இயலும். கயல்போல் மிளிர்கின்ற உன் கண்களைக் கொண்டே 'பரமேசனையும் வசப்படுத்தியவை இவை' என்று உன் திருமுகச் சோதியை நோக்கி என் மனம் அங்காந்திருக்கின்றது. இமயமலையிலே தோன்றிய ஆனந்தமயமான கொடி

யொன்று, அங்குள்ளதொரு அடிமரத்திலே படர்ந்து, செழுப்புற வளர்ந்து, கொங்கைகளாகிய பழங்களோடும் சொற்களாகிய இன்சாற்றோடும் பெயர்ந்து, நான் இருக்குமிடந்தேடி என் நோய்களைத் தீர்க்க வந்ததே என்று விம்மலுறுகிறேன். மற்றவர்கள் ஏதோ சில குணங்களையுடையவை என்று கருதி மூலிகைகளையும் பச்சிலைகளையும் தேடித்திரியவும், பட்ட மரத்தைப் போற் செயலற்றிருந்த பரமனைத் தழுவி இன்புறுத்தி, ஒன்று மறியாத எனக்கும் உலகனைத்திற்குமே முத்திப் பேறாகிய நற்பழங்களை அளிக்கச் செய்ய வல்ல வல்லி எளிதிற் கிட்டியதே என்று வியப்புறுகிறேன். தாயே! நீயே வேதங்களை யருளி சகல தருமங்களையும் விதித் தாய்; வள்ளன்மை மிக்க குபேரனும் உன்னை அடி பணிந்தே பொருட் செல்வங்களை யெல்லாம் பெற்று வழங்குகிறான்; காமனை வென்ற பரம்பொருளையும் காமவசப்படுத்தி, காமதேவனுக்கு வெற்றியளித்தவள் அல்லையோ நீ? நல்லோர் முக்தி பெறுவதற்கு விதை யாவதும் நீயே. ஆதலால், அறம், பொருள், இன்பம், வீடு, என்னும் நாற்பாலையும் அளிக்க வல்ல நீயே எனக்குப் பக்திப் பெருக்காகிய நற்பாலைச் சுரந்தருளி, என் மனத்தை உன்னிடம் நிலைப்பெற்றிருக்கும்படியா கச் செய்ய வேண்டும்; என்னிடம் பக்தி அதிகமில்லை என்றாலும் நான் சாதகத்தைப் போல உன்னருளையே நோக்கி யிருப்பதால், மேகம் போன்ற உன் கண்களி னின்று கருணை வெள்ளம் பொழிய வேண்டும். கற்பகக் கொடியும், வேண்டியவற்றை அன்றே அப்பொழுதே உதவாவிடின், மற்றக் கொடிக்கும் அதற்கும் வித்தியாசமில்லையே. நீயும் மற்றைத் தெய்வம் போன்றவளா? இல்லையே. நானும் வேறொரு தெய்வத்தை நாடுவோன் அல்லனே. சரண் புகுந்தோ ருடைய கஷ்டங்களை யெல்லாம் நீக்கியருளும் விநாயகரும் அந்தக் குணத்தைத் தாயாகிய உன்னிடமிருந்தே பெற்றார் என்று அறிந்தன்றோ உன்னைச் சரண் புகுந் தென். வேறு யாருளர் என்னைக்காப்பதற்கு? சாக்கடை

நீர் கங்கையைச் சார்ந்து புனிதமாவது போலவும், இரும்பு பரிசவேதியாற் பொன்னுவது போலவும், என் மனம்உன்னைப் பற்றிக்கொண்டு நிர்மலமாகிவிடாதோ? உன்னுலல்லால் யாவராலும் ஒன்றும் குறை வேண்டேன். பிரும்மதேவன் முதலான முன்னோர்கள், உன்னையே அறிவிலிகளுக்கு வேண்டுபவற்றிற்கு அதிகமாகவே கொடுப்பவள் என்று போற்றுகிறார்கள்: நானோ அறிவிலி; எனக்கு வேண்டியது எது என்று எனக்குத் தெரியாது. நீ எனக்கு எது நல்லதோ அதைக் கொடுக்கவேண்டும். உனக்குப் பணிவிடை செய்ய உன் அரண்மனையிலேயே அரியயன் முதலானோர் காத்திருக்கிறார்கள். உன்னை இல்லாளாகப் பெற்றதாலன்றோ, உடுக்க உடையின்றி, உண்ண வூணின்றி, இருக்க இடமின்றி, கிழ மாட்டின் மீதேறித் திரிந்த கோணுங்கியும், வெள்ளி மலையை இருப்பிடமாகவும் அயன் முதலானோரைச் சேவகர்களாகவும் மூவுலகைக் குடிகளாகவும் நவ சித்திகளையும் கையாட்களாகவும் பெற்று மகிழ்கிறார். இவ்வளவு செல்வத்தையுமுடைய நீ இம்மூவுலகினுள் அகப்பட்ட என்னைக் காக்கமாட்டாயோ? உலகங்களை யெல்லாம் அழிக்கின்றவராய் சுடுகாட்டிலே சுடலைப்பொடியைப் பூசிக்கொண்டு விளங்கும் பசுபதியும், உன்னுடைய சேர்த்தியாலே மூவுலகையும் அழிக்கப் புகுந்த கடு விஷத்தைக் கழுத்திலே அடக்கிக் கொண்டார் என்ருல், "இந்த அசடும் என் பிள்ளையல்லனோ?" என்று சிவபிரானிடம் சொல்லி என்னைக் காப்பாற்ற மாட்டாயோ? சிவபிரானும் பரம கருணாமூர்த்தி யல்லவோ? உன்னழகைக் கண்டு பயந்து வெளிறிய முகத்தோடு வேர்த்து விறுவிறுத்த கங்காதேவியைக் கண்டு, கருணை கூர்ந்து, அவளை நிர்பயமாயிருக்கும்படி தம்முடைய தலைமீது அமர்த்தவில்லையோ? நீ திருமஞ்சனஞ் செய்த பிரக்ஷாளன ஜலத்திலே நிர்மாலியப் பொருட்களைப் பிசைந்தன்றோ பிரும்மதேவன் தேவ கன்னிகைகளைச் சிருஷ்டித்தான் என்கிறார்கள். உன் பாதத்தை யடைந்த நான்

நிர்மாலியமாகக் கழிக்கப்பட்டாலும், தேவகன்னிகையாகி உனக்கு அங்ககப்பணி செய்யும் பேற்றைப் பெறுவேன். அப்பொழுது, உன்னாலே தோழியாகக் கொள்ளப்பட்டு, எப்பொழுதும் வசந்தமாயமைந்த உன் அரண்மனைத் தோட்டத்திலே, நாற்புறமும் பூத்துச் சொரிகின்ற கொடிகளாற் சூழப்பெற்ற தாமரைப் பொய்கையிலே, அன்னப்பேடுகள் உன்னைக் கண்டு ஒதுங்கியிருக்க; மலயமாருதம் மெல்லென வீசுவதாலே எழுகின்ற சிற்றலை மோத, நீ களித்துப் புரிகின்ற நீர் விளையாட்டிலே கலந்துகொண்டு உன்னை மகிழ்விப்பேன் என்ற நினைவிலே இன்றைத் தாபங்களைப் போக்கிக் கொள்ளுமாறு நீ அருளவேண்டும். இவ்வாறு துதிசெய்யும் வழியை நமக்குக் கற்பிக்கின்றார்கள் ஸ்ரீ சங்கர பகவத் பாதர்கள்.

---

ஶ்ரீ:



# ॥ आनन्दलहरी ॥

## ஆனந்தலஹரீ

---

भवानि स्तोतुं त्वां प्रभवति चतुर्भिर्न वदनैः
प्रजानामीशानस्त्रिपुरमथनः पञ्चभिरपि ।
न षड्भिः सेनानीर्दशशतमुखैरप्यहिपति-
स्तदान्येषां केषां कथय कथमस्मिन्नवसरः ॥ १ ॥

பவானி ஸ்தோதும் த்வாம் ப்ரபவதி சதுர்பிர்ந வதனை:
ப்ரஜாநாமீஶானஸ் த்ரிபுரமதன பஞ்சபிரபி ।
ந ஷட்பி: ஸேனானீர் தஶஶதமுகைரப்யஹிபதிஸ்-
ததான்யேஷாம் கேஷாம் கதய கதமஸ்மின்னவஸர: ॥ 1 ॥

பவானி=என்றுமுள்ளவர் என்பதாலே பவதேவர் என்று பெயர் பெற்ற பரமேச்வரருக்குப் பத்தினியாக விளங்கும் பார்வதி தேவியே! த்வாம்=உன்னை, **ஸ்தோதும்** = துதிப்பதற்கு, ப்ரஜாநாம் ஈஶான: = மக்களைப் படைத்ததாலே தன்னை ஈசுவரன் என்று நினைத்துக் கொண்டிருக்கிற பிரும்மதேவனும், சதுர்பி: **வதனை:**=(தன்)நான்கு முகங்களாலும், ந ப்ரபவதி:= திறமையுடையவன் ஆகவில்லை; த்ரிபுரமதன: = முப்புரங்களை அழித்த பரமசிவனும், (வதனை:) பஞ்சபி: **அபி**=ஐந்து முகங்களாலுங்கூட (திறமையுடையவன் ஆகவில்லை), ஷட்பி: (வதனை:)=ஆறுமுகங்களாலும், **ஸேனானீ:**=தேவர்களுடைய சேனைகளை நடத்துந் **திறமைவாய்ந்தவனாகப்** பிறந்து ஸேனாபதி என்னும் பட்டப்பெயர்பெற்ற முருகனும், (திறமையுடையவன் ஆகவில்லை) அஹிபதி:=பாம்புகளின் தலைவனான ஆதிசேஷனும், தஶஶதமுகை: அபி=ஆயிரம் முகங்களாலுங்கூட (திறமையுடையவன் ஆகவில்லை), **ததா**= பிறகு, **அன்யேஷாம் கேஷாம்**=வேறு சிலருக்கு, **அஸ்மின்**=(உன்னை துதிப்பதான) இந்த விஷயத்தில், **கதம்** அவஸர:=எவ்வாறு தகுதியுண்டாகும், (என்பதை) **கதய**=(நீயே எனக்கு) விரித்துச் சொல்.

தேவியின் மஹிமையை எடுத்துரைப்பதற்கு, நான்கு முகமல்ல, ஐந்து முகமல்ல, ஆறுமுகமல்ல, ஆயிரம் முகம் இருந்தாலும் போதாது. மக்களைப் படைக்கும் சக்தியுடைய பிரும்மதேவனாலும் முடியாது. முப்புரங்களையும் எரிக்கவல்ல பரமசிவனாலும் முடியாது. தேவர்களின் சேனைகளை நடத்திப் போரில் வெற்றிபெறுந் திறமையுடைய முருகக் கடவுளாலும் முடியாது. அகில புவனங்களையும் தன் ஆயிரம் தலைகளாலே தாங்கவல்ல ஆதிசேஷனாலும் முடியாது. ஆகையால் ஒவ்வொரு முகத்தையே உடையவர்களாய் என்னைப் போன்ற துர்பலர்களான

சாமான்ய ஜனங்கள் உன்னைத் துதிப்பது எவ்வாறு? நீயே ஆலோசனை செய்து எனக்குச் சொல்ல வேண்டும்.

இவ்வாறு அவையடக்கங் கூறி, ஸ்ரீ சங்கரபகவத்பாதர்கள் ஸ்ரீ மாதாவை ஸ்துதிப்பதற்கும் அந்த தேவியின் அருளே வேண்டும் என்று மக்களுக்குப் போதிக்கிறார்கள்.

---

**घृतक्षीरद्राक्षामधुमधुरिमा कैरपि पदैः**
**विशिष्यानाख्येयो भवति रसनामात्रविषयः ।**
**तथा ते सौन्दर्यं परमशिवदृङ्मात्रविषयः**
**कथंकारं ब्रूमः सकलनिगमागोचरगुणे ॥ २ ॥**

**க்ருதக்ஷீரத்ராக்ஷாமதுமரிமா கைரபி பதை:**
**விஶிஷ்யாநாக்யேயோ பவதி ரஸநாமாத்ரவிஷய: ।**
**ததா தே ஸௌந்தர்யம் பரமஶிவத்ருங்மாத்ரவிஷய:**
**கதங்காரம் ப்ரூம: ஸகலநிகமாகோசரகுணே ॥ 2 ॥**

**க்ருத-க்ஷீர-த்ராக்ஷா-மது-மதுரிமா** = நெய், பால், திராக்ஷை, தேன் இவற்றின் இனிமையானது, **விஶிஷ்ய** = விசேஷித்து, (தனிச்சிறப்பாக) **கை: பதை: அபி** = எந்தச் சொற்களாலுமே, **அநாக்யேய:** = அறிவிக்க முடியாததாய் **ரஸநா-மாத்ரவிஷய:** = நாக்கிற்கு மாத்திரம் புலனாவதாய், **பவதி** = இருக்கின்றது; **ததா** = அவ்வாறே, **தே** = உன்னுடைய, **ஸௌந்தர்யம்** = அழகு, **பரமஶிவ-த்ருங்மாத்ர-விஷய:** = பரமசிவனுடைய கண்களுக்கு மட்டுமே புலனாகின்ற தன்மையுடையதாய் இருக்கின்றது; (அதை) **கதங்காரம்** = எத்தன்மையது, (என்று) **ப்ரூம:** = (நாங்கள்) சொல்வோம்? **ஸகலநிகமாகோசர-குணே** = எல்லா வேதங்களுக்குமே புலனாகாத தன்மையை யுடையவளே!

ஒரு இந்த்ரியத்திற்குப் புலனாகும் பொருளை வேறொரு இந்த்ரியத்தால் அறிய இயலாது. நாக்கால் இனிப்பையும் அதன் பேதங்களையும் அறிந்துகொள்ள லாமேயொழிய வார்த்தைகளால் இனிமையை வர்ணிக்க முடியாது. அதுபோல, ரூபஸௌந்தர்யத்தையும் கண்ணால் கண்டு அறிந்துகொள்ளலாமே யொழிய வார்த்தைகளால் வர்ணிக்கமுடியாது. சாதாரணமாக எல்லோரும் காணக்கூடிய வடிவழகின் தன்மை இவ்வாறாக, பரமசிவனுடைய கண்களுக்கு மட்டுமே புலனாகி, பரப்ரும்மத்தின் ஸ்வரூபத்தை வர்ணிக்கப் புகுந்த வேதங்கள் அனைத்திற்குமே புலனாகாத பேரழகு வாய்ந்த உன்னை அவ்வேதங்களாலேயே வர்ணிக்க முடியாதென்றால், வாக்குவன்மை ஒரு சிறிதும் இல்லாத என்போன்ற சாதாரண ஜனங்கள் உன்னை வர்ணிப்பது எப்படி ?

இவ்வாறு கூறி, வேத வேதாந்த உண்மைகளைக் கண்டு உரை செய்த ஸ்ரீ பகவத்பாதர்களே, அவ்வுண்மைகளுக்கும் அப்பாலுள்ள தேவீ ஸ்வரூபத்தை காணவோ, உரை செய்யவோ முடியாதாயினும், சிற்சில அடையாளங்களைக் காட்டி, சிறு குழந்தைகள் தங்களைப் பெற்ற தாயாரைப் பிறர்க்கு அறிவுறுத்துவதுபோல, அறிவுறுத்துகிறார்கள்.

---

मुखे ते ताम्बूलं नयनयुगले कज्जलकला
ललाटे काश्मीरं विलसति गले मौक्तिकलता ।
स्फुरत्काञ्ची शाटी पृथुकटितटे हाटकमयी
भजामि त्वां गौरीं नगपतिकिशोरीमविरतम् ॥ ३ ॥

முகே தே தாம்பூலம் நயன யுகலே கஜ்ஜலகலா
லலாடே காஶ்மீரம் விலஸதி கலே மௌக்திகலதா ।
ஸ்புரத்காஞ்சீ ஶாடீ ப்ருதுகடிதடே ஹாடகமயீ
பஜாமி த்வாம் கௌரீம் நகபதிகிஶோரீமவிரதம் ॥ 3 ॥

தே = உன்னுடைய, முகே = வாயிலே, தாம்பூலம் = வெற்றிலை, நயனயுகலே = இரண்டு கண்களிலும், கஜ்ஜலகலா = (சிறிதே இட்ட) மையின் கோடு, லலாடே = நெற்றியில், காஶ்மீரம் = குங்குமம், கலே = கழுத்தில், மௌக்திகலதா = (கொடி போன்ற) முத்துமாலை, ப்ருதுகடிதடே = அகன்ற அல்குற் பிரதேசத்தில், ஸ்புரத் காஞ்சீ = (காஞ்சி என்னும்) மேகலையோடு விளங்கும், ஹாடகமயீ ஶாடீ = பொன்மயமானபுடைவை, விலஸதி = சோபிக்கின்றது. (இவ்வாருன) நகபதிகிஶோரீம் = பர்வதராஜனுடைய பெண்ணுகிய, கௌரீம் = கௌரீ தேவி யென்னும், த்வாம் = உன்னை, அவிரதம் = இடைவிடாமல், பஜாமி = பூஜை செய்கிறேன்

தேவியின் ரூபம் தேஜோமயமாய் இருப்பதால் என்னுடைய கண்ணுக்குத் தோன்ருவிட்டாலும், அவளுடைய வாயில் உள்ள தாம்பூலமும், கண்ணிலுள்ள மையும், இடையிலே உடுத்திய பொன்னுடையும், அதன்மேலணிந்த ஒட்டியாணமும் என் கண்களின் முன் எப்போதும் தோன்றுவனவாதலால் அவற்றைக்கொண்டு தனது அங்கங்களின் அமைப்பையும் வாய்ப்பையும் ஊகித்துக்கொள்ளச்செய்து, தன் ரூபலாவண்யத்தை ஒரு சிறிது காணும்படியாக அருளும் பர்வதராஜ குமாரியை நான் எப்பொழுதும் பூஜித்துக்கொண்டிருப்பேன்.

தேவியின் திருமேனி ஜ்யோதிர்மயமாகப் ப்ரகாசிக்கும்; அதனுலேதான் "கௌரீ" என்று பெயர் பெற்ருள்; "அத்திருமேனியினிடையே உதடுகள் சிவந்தும், கண்கள் கருமையாகவும், ஆடையாபரணங்கள் பொன்னிறமாகவும் தோன்றுவதால் மட்டுமே, தேவியினுடைய அவயவ ஸௌந்தர்யத்தை ஊகித்து உணர்ந்துகொள்ள முடியும்" என்று கூறி, செயற்கை யணிகளான தாம்பூலம், மை, குங்குமப் பொட்டு, முத்துமாலை, பட்டாடை இவையெல்லாம்,

தேவியின் அவயவ சோபையை மட்டுப்படுத்திக் காட்டுவதாலே, அவளுடைய திருமேனியின் அழகினை ஒருவாறு நம்முடைய கண்களுக்கும் புலனாகும்படி உதவுகின்றன என்று அந்த உபகரணங்களுக்குத் தம்முடைய சிருதக்ஞதையைக் காட்டுகிறார்கள்.

---

विराजन्मन्दारद्रुमकुसुमहारस्तनतटी-
नदद्वीणानादश्रवणविलसत्कुण्डलगुणा ।
नताङ्गी मातङ्गी रुचिरगतिभङ्गी भगवती
सती शंभोरम्भोरुहचटुलचक्षुर्विजयते ॥ ४ ॥

விராஜன் மந்தாரத்ருமகுஸுமஹாரஸ்தனதட-
நதத்வீணாநாதஶ்ரவணவிலஸத்குண்டலகுணா ।
நதாங்கீ மாதங்கீ ருசிரகதிபங்கீ பகவதீ
ஸதீ ஶம்போரம்போருஹ-சடுலசக்ஷுர்விஜயதே ॥ 4 ॥

*விராஜன்-மந்தாரத்ரும குஸுமஹார-ஸ்தனதட-நதத்வீணாநாத - ஶ்ரவண - விலஸத்குண்டல - குணா* - சிறந்து விளங்கும் மந்தார மரத்தின் பூக்களாலான மாலையையுடையதாய் வக்ஷஸ்தலத்திலே சார்த்தப்பெற்று) சப்திக்கின்ற வீணையின் ஒலியை உற்றுக் கேட்குங் காதுகளிலே ஒளிவிடுங் குண்டலங்களை யுடையவளும், **நதாங்கீ** =(ஸ்தன பாரத்தால்) சிறிது வளைந்ததாகத் தோன்றும் தேகத்தை யுடையவளும், **மாதங்கீ** = மதங்க முனிவரின் மகளும் (நடையிலே பிடிபோன்றவளும்) **ருசிரகதிபங்கீ** = நடையழகு வாய்ந்தவளும், **அம்போருஹசடுலசக்ஷு:** = தாமரை போன்று மிளிரும் அழகிய கண்களை யுடையவளும், **ஶம்போ: ஸதீ** = சம்பு தேவருடைய பத்தினியுமான, **பகவதீ** =(என் பிராட்டியான) பகவதி, **விஜயதே** = வெற்றியோடு விளங்குகிறாள்.

இசை முனிவரான மதங்கருக்கு மகளாய் அவதரித்தவள் என்பதை விளக்கிக்கொண்டு, தேவி தன் மார்பிலே அணிந்த மந்தார மாலைமேல் வீணையை மெல்லச் சார்த்தியவளாய், அந்த வீணையின் நாதத்தை உற்றுக் கேட்கும் பாவனையாய் தலையை ஒருபுறம் சிறிது சாய்த்தவண்ணமாக விளங்குகிருள். அவளுடைய கண்கள் தாமரைபோல் மங்களகரமாக மிளிர்ந்து மங்கள வடிவத்தையுடைய சம்புதேவருக்கு ஏற்ற மனைவி என்பதை விளக்குகின்றன.

பரதேவதையாக இருந்தும், தேவியானவள் பரமசிவனுக்கு அடங்கிய பத்தினி என்பதை அவருக்குரிய ஸாமகானத்தை வீணையிலே அமைத்துப் பாடுவதிலே ஊக்கத்தைக் காட்டியும், மென்னடையாலும் வணங்கிய தலையாலும் நாதனையே சிறக்கணித்துப் பார்க்கின்ற கண்களாலும் காட்டியும் சிறந்து விளங்குகிருள் என்கிருர்கள்.

---

नवीनार्क-भ्राजन्मणिकनक-भूषापरिकरै-
वृताङ्गी सारङ्गीरुचिरनयनाङ्गीकृतशिवा ।
तटित्पीता पीताम्बरललितमञ्जीरसुभगा
ममापर्णा पूर्णा निरवधिसुखैरस्तु सुमुखी ॥ ५ ॥

நவீனர் (க்) கப்ராஜன்மணிகனகபூஷாபரிகரைர்-
வ்ருதாங்கீ ஸாராங்கீருசிரநயனங்கீக்ருத-ஶிவா ‖
தடித்பீதா பீதாம்பரலலிதமஞ்ஜீர-ஸுபகா
மமாபர்ணு பூர்ணு நிரவதிஸுகைரஸ்து ஸுமுகீ ‖5‖

நவீனர் (க்) க-ப்ராஜன்மணி-கனக-பூஷாபரிகரை:=புதிதாகத் தோன்றிய பால ஸூர்யனைப்போல ஒளி விடும் ரத்தின மணிகளைக்கொண்ட பொன்னுபரணங்களின் தொகுதிகளால், வ்ருதாங்கீ=சூழப்பெற்ற

அங்கங்களை யுடையவளும், ஸாரங்கீ-ருசிர-நயனங்கீக்ருதஶிவா = பெண் மானின் கண்களைப்போல அழகிய கண்களாலே (தனக்கு நாயகனாக) பரமசிவனை ஏற்றுக்கொண்டவளும் (மானின் கண்களைப்போன்ற கண்களின் அழகாலே பரமசிவனை வசீகரித்துத் தன்னுடைய அங்கமாக வைத்துக்கொண்டவளும்), தடித்பீதா = மின்னலைப்போல் ஒளிவிடுகின்ற செம்பொன் னிற முடையவளும், பீதாம்பரலலிதமஞ்ஜீரஸுபகா = (தான் உடுத்திய) பொன்னுடையை (அவ்வாடை பாதம் வரையிலும் படிந்திருப்பதால்) பரபாகமாகக் கொண்டு அழகுபெற்ற சிலம்புகளோடு கட்டழகியாய் விளங்குபவளுமான, அபர்ணா = பார்வதீ தேவி நிரவதிஸுகை: பூர்ணா = எல்லையற்ற இன்பங்களால் நிரம்பியவளாய், மம ஸுமுகீ அஸ்து = எனக்கு நல்ல முகத்தை யுடையவளாய் (நல்ல கடாக்ஷத்தையுடைய முகத்தோடு விளங்குபவளாய்) இருப்பாளாக.

தேவியின் அங்கங்களில் எங்கும் ஆபரணங்களை அணிந்திருப்பதாலும் பொன்னுடை உடுத்திருப்பதாலும், அவற்றை நாம் கண்ணாரக் காண இயலாது: மின்னலைப்போல், சிறிது சிறிதே பிரகாசிக்கும். ஆயினும், பாதச் சிலம்புகளோடு விளங்கும் அவளுடைய பாதங்களையும் மானின் கண்களைப்போல் மிளிரும் கண்களையுடைய அவள் முகத்தையும் ஆடை ஆபரணங்களால் மறைக்கவில்லையாதலால், அவற்றை நன்கு காணலாம். ஆதலால், அப் பாதங்களிலே வணங்கி, எல்லா இன்பங்களும் நிரம்பிய தேவியின் முகத்திலே தோன்றும் மந்த ஹாஸத்தையும் கடாக்ஷத்தையும் கண்ணாரக் காண்பதற்கு நாம் பாத்திரமாவோமாக.

தேவியின் தேஜோமயமான திருமேனியானது ஆடையாபரணங்களாலே மறைக்கப்பெற்று நம் கண்களுக்குத் தோன்றாவிடினும், மானின் கண்களைப்

போல் மிளிரும் திருக்கண்களும் சிலம்புகள் பூண்ட திருவடிகளும் நமக்கு அருள்புரியவே மறைக்கப் பெருதனவாய் அமைந்துள்ளன என்கிருர்கள்.

---

हिमाद्रेः संभूता सुललितकरैः पल्लवयुता
सुपुष्पा मुक्ताभिर्भ्रमरकलिता चालकभरैः ।
कृतस्थाणुस्थाना कुचफलनता सूक्तिसरसा
रुजां हन्त्री गन्त्री विलसति चिदानन्दलतिका ॥ ६ ॥

ஹிமாத்ரே: ஸம்பூதா ஸுலலிதகரை: பல்லவயுதா
ஸுபுஷ்பா முக்தாபிர் ப்ரமரகலிதா சாலகபரை: ।
க்ருதஸ்தாணுஸ்தாஞ குசபலநதா ஸூக்திஸரஸா
ருஜாம் ஹந்த்ரீ கந்த்ரீ விலஸதி சிதானந்தலதிகா ॥ 6 ॥

ஹிமாத்ரே: ஸம்பூதா = இமயமலையிலே உண்டானதும் (ஹிமவானுக்கு மகளாகப் பிறந்தவளும்), ஸுலலிதகரை: பல்லவயுதா = மிக்க அழகுவாய்ந்த கைகளாலே தளிர்களை யுடையதும் (தளிர்போன்ற கைகளையுடையவளும்), முக்தாபி: ஸுபுஷ்பா = முத்துகளாலே பூக்களை யுடையதும் (முத்துமாலையின் முத்துக்களாலும் பலவரிசைகளாலும் பூக்களையுடைய கொடிபோன்றவளும்), அலகபரை: ப்ரமரகலிதா ச = அளகபாரத்தால் வண்டுகளின் வரிசையை யுடையதும் (வண்டுகள் படிந்திருப்பதுபோன்று கரியதாக ஒளிருங் கூந்தலையுடையவளும்), க்ருதஸ்தாணுஸ்தாஞ = அடிமரமே இடமாக அதின்மேல் படர்ந்திருப்பதும் (ஸ்தாணு என்னும் பரமசிவனிடத்திலேயே எப்பொழுதும் நிலைபெற்றிருப்பவளும்), குசபலநதா = கொங்கைகள் என்னும் பழங்களின் கனத்தால் சிறிது வளைந்து தாழ்ந்த வடிவமுடையதும் (ஸ்தன பாரத்தால் அழ

காகச் சிறிது வளைந்த வடிவமுடையவளும்), ஸூக்தி ஸரஸா = இன்சொற்கள் என்னும் சாறு கொண்டதும் (நவரஸங்களும் நிரம்பிய பேச்சுக்களை யுடையவளும்), ருஜாம் ஹந்த்ரீ = நோவுகளை முற்றும் நீக்குவதும் (ஸம்ஸார பந்தத்தாலே உண்டாகின்ற நோய்களைப் போக்கியருளுபவளும்), சிதானந்தலதிகா = சித் என்னும் இன்பப் பூங்கொடி யொன்று (சித்தும் ஆனந்தமுமாகி), கந்த்ரீ = (புடைபெயர்ந்து எங்கும்) செல்லக் கூடியதாகி, விலஸதி = (எங்கும் எப்பொழுதும் உள்ள ஸத் ஆகி) விளங்குகின்றன.

ஸச்சிதானந்த வடிவமான தேவி ஓரரிய பூங்கொடி. இப்பூங்கொடி சிறந்த மருந்துக்கொடி. இக்கொடி இமயமலையிலே முளைத்தது. வாத்ஸல்யத்தோடு அணைக்க வரும் தேவியின் கைகள் தாம் பூந்தளிர்கள்; முத்துக்கோவை போன்ற அவளுடைய முறுவல்களே பூக்கள்; அப்பூக்களை நோக்கி வருகின்ற வண்டுகளின் தொகுதிகளைப் போன்றது தேவியின் நெற்றிப்புறத்திலே சுருண்டு கருநிறத்தோடு பிரகாசிக்கும் முன்னுச்சி மயிர்க்கற்றை; பூங்கொடி ஒரு மரத்தின் அடிபாகத்தைத் தழுவிப்படர்ந்திருப்பது போலவே, தேவியும் ஸ்தாணுவைத் தழுவிக் கொண்டிருக்கிறுள். ஆனுல், தேவி வெறும் பூங்கொடியல்லள்; தாயன் பாலே கனிந்த பழங்களைப் போன்ற ஸ்தனங்களை யுடையவள். இந்தக் கொடியைச் சிதைத்துச் சாறுபிழிய வேண்டியதில்லை. தானுகவே பெருக்கெடுத்தோடும் மருந்து சாறு போன்ற மதுரமான பேச்சே, நம்மை பீடிக்கும் ஸம்ஸாரமென்னும் நோவுகளை முற்றும் போக்கி, நமக்கு ஆனந்தத்தை யளிப்பதாகும். இத்தகைய திவ்யௌஷதியை நாம் தேடிக்கொண்டு போகவேண்டியதில்லை. இந்தக் கற்பகக்கொடி எங்கோ நாம் சென்றடையக்கூடாத பிரதேசத்திலுள்ள அசையாப்

பொருள் அன்று; நம்மை நாடிக்கொண்டு நாம் இருக்கும் இடத்திற்கு வந்து நம்மைக் காப்பாற்றுந் திறமை வாய்ந்தது.

தேவியை உபாசிப்பதற்கு நாம் காட்டிற்குப் போக வேண்டியதில்லை, க்ஷேத்ராடனம் செய்ய வேண்டிய தில்லை. நாம் இருக்குமிடந் தேடிவந்து நம்முடைய மனத்துட் புகுந்து நம்மைக் காக்கின்ற அன்னையை "அம்மா!" என்று அழைத்தால், உடனே நம் கண் முன் தோன்றி "பயப்படாதே"! என்று இன்சொல் அளித்து, மார்போடு அணைத்துக்கொள்வாள் என்கிறார்கள்.

---

सपर्णामाकीर्णां कतिपयगुणैः सादरमिह
श्रयन्त्यन्ये वल्लीं मम तु मतिरेवं विलसति।
अपर्णैका सेव्या जगति सकलैर्यत्परिवृतः
पुराणोऽपि स्थाणुः फलति किल कैवल्यपदवीम् ॥ ७॥

ஸபர்ணமாகீர்ணம் கதிபயகுணை: ஸாதரமிஹ
ஶ்ரயந்த்யன்யே வல்லீம் மம து மதிரேவம் விலஸதி।
அபர்ணைகா ஸேவ்யா ஜகதி ஸகலைர்யத்பரிவ்ருத:
புராணோபி ஸ்தாணு: பலதி கில கைவல்யபதவீம் ॥ 7 ॥

ஸபர்ணம் = இலைகளையுடையதும், கதிபய-குணை: ஆகீர்ணம் = ஒரு சில குணங்களையே கொண்டதுமான, வல்லீம் = மருந்துக்கொடியை, இஹ = இந்த உலகிலே, ஸாதரம் = பிரியத்தோடு, அன்யே = பிறர், ஶ்ரயந்தி = நாடிச் செல்கிறார்கள்: மம மதி: து = என்னுடைய மனமோ, ஏவம் = இவ்வாறு, விலஸதி = விளங்கு கின்றது; (எவ்வாறு என்றால்) ஜகதி = (இந்த) உல கிலே, ஸகலை: = எல்லோராலும், அபர்ண = (இலையில்

லாததான ) அபர்ணு என்னும் பெயர் கொண்ட,ஏகா = (இந்தக் கொடி) ஒன்றே, ஸேவ்யா = (மருந்தாக உட்கொள்வதற்கு உரியது) ஸேவிக்கத்தக்கது ; யத்பரிவ்ருத:— எந்தக்கொடியாலே நன்ருகத் தழுவப் பெற்றதான (எந்த தேவியாலே நன்ருகத் தழுவப் பெற்றவரான), புராண:ஸ்தாணு:, அபி = பட்டுப்போன அடிமரமும் (பண்டைப் பழந்தெய்வமாகிய ஸ்தாணு தேவரும்), கைவல்ய-பதவீத் பலதி கில = (முன்போன்ற) தளிப்பதவியை (விருக்ஷத்தன்மையை) நிச்சயமாகப் பெறுகின்றது (கைவல்ய பதவியை எல்லோர்க்கும் அளிக்கிருர்).

தங்களுக்குள்ள நோய்களைப் போக்கிக் கொள்வதற்காக பிறர் எல்லாரும் மருந்துப் பச்சிலைகளையுடைய கொடியைத் தேடித்திரிகிருர்கள். ஆனுல் என் மனம் அவ்வாறு பிரமை கொண்டு திரியவில்லை: எனக்குத் தெளிவாகத் தோன்றும் ஞானம் என்னவென்ருல், அபர்ணு என்னும் தேவியே எல்லோருடைய நோய்களை யெல்லாம் நீக்கும் மருந்துக்கொடி ; இந்தக் கொடி பண்டை நாளிலே பட்டுப்போன ஒரு மரக்கட்டையையும் தளிர்வித்து, மரமாக வளர்ந்து முன்போல பழங்களை எல்லோர்க்கும் உதவச் செய்யும் சக்தி வாய்ந்தது. தேவியின் கடாக்ஷத்தாலேதான், பரமசிவன் உள்ளான் என்பதை நாம் உணர்ந்து, அவனுடைய அனுக்ரஹத்தாலே கைவல்ய பதவியென்னும் மோக்ஷ சுகத்தைப் பலனுகப் பெற முடியும்.

எந்த தேவதையை ஆராதித்துப் பரம்பொருளை அணுகி அதனேடு ஒன்ருவோம் என்று ஏங்கித் திரிவோர்க்கு, தேவியை நாடினல், அவளருகிலே அவளோடு ஒன்றியிருக்கும் பரமசிவனேடு நம்மைச் சேர்ப்பிப்பாள் என்று உபதேசிக்கிருர்கள்.

विधात्री धर्माणां त्वमसि सकलाम्नायजननी
त्वमर्थानां मूलं धनदनमनीयाङ्घ्रिकमले ।
त्वमादिः कामानां जननि कृतकन्दर्पविजये
सतां मुक्तेर्बीजं त्वमसिपरमब्रह्ममहिषी ॥ ८ ॥

விதாத்ரீ தர்மாணும் த்வமஸி ஸகலாம்நாயஜனனீ
த்வமர்(த்) தாளும் மூலம் தனதநமனீயாங்க்ரிகமலே ।
த்வமாதி: காமாளும் ஜனனி க்ருதகந்தர்(ப்)பவிஜயே
ஸதாம் முக்தேர்பீஜம் த்வமஸி பரமப்ரஹ்மமஹிஷீ ॥ 8 ॥

*ஸகலாம்ஞயஜனனீ* = எல்லா வேதங்களையும் விதி வாக்கியங்களையும் பிறப்பித்த தாயான, **த்வம்** = நீ, **தர்மாணும்** = (பல்வேறு வகைப்பட்ட) தர்மங்களை, **விதாத்ரீ** = (இன்னுர் இன்னுர்க்கு உரியவை என்று) பாகுபாடு செய்கிறவள்; **தனத-நமனீயாங்ரி-கமலே** = குபேரனல் வணங்கத்தக்க பாத கமலங்களையுடையவளே! **த்வம்** = நீ, **அர் (த்) தாளும் மூலம்** = பொருள்களுக்கு ஆதி காரணம் (ஆகிருய்); **க்ருத-கந்தர் (ப்)ப-விஜயே** = மன்மதனை வென்றவளே! (அவனை வென்றதின் அடையாளமாக அவனுடைய கரும்பு வில் பஞ்ச புஷ்ப பாணங்கள் இவற்றை யுடையவளே!) **ஜனனீ** = (உலகங்களுக்கெல்லாம்) தாயே! **த்வம்** = நீ, **காமாளும்** = காமங்களுக்கு, **ஆதி:** = தனி முதல் (காமங்கள் அனைத்தும் உன்னிடமிருந்து தோன்றின, ஆதலால் நீ அவற்றை அளிக்கவல்லவள்), **பரம ப்ரஹ்ம-மஹிஷீ** = பரப்பிரும்மத்தின் ராணியாகிய, **த்வம்** = நீ, **ஸதாம் முக்தே: பீஜம்** = நல்லோர்களுக்குரிய மோக்ஷத்திற்கு வித்து (அவர்கள் மோக்ஷம் பெறுவதற்கு காரணம்) **அஸி** = ஆகின்ருய்.

தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷம் என்னும் நான்கு புருஷார்த்தங்களுக்கும், தேவிதான் மூல காரணம். எப்படியென்ருல், தேவியே வேத வசனங்

களாலே தர்மங்களை விதிக்கிருள். சிறந்த வள்ளல் என்று பிரசித்தி பெற்ற குபேரனுக்கும், அவனது செல்வம் தேவியை வணங்கியே கிடைத்தது. காமனுல் வெற்றிபெற இயலாத பரமேச்வரனையும் தன் ஸௌபாக்கியங்களால் வசப்படுத்திய பெருமை வாய்ந்தவள். அகிலவுலகங்களையும் ஈன்ற தாயாகிய தேவி பரப்பிரும்மத்தின் தேவியாகியதால், அவளுடைய கருணையாலேயே நல்லோர் மோக்ஷத்தைப் பெறுகிருர்கள். ஆகவே, தேவீயே! உன்னைத் தொழுதே பிறர் நான்கு புருஷார்த்தங்களையும் பெறுவதைக் கண்டு, நீயே எனக்கும் எல்லாம் தரவல்ல தாய் என்று அறிந்துகொண்டேன்.

எவன் எதை வேண்டினுலும், லோகமாதாவாகிய தேவியின் அருளாலேயே அதைப் பெறலாம் என்று உபதேசிக்கிருர்கள்.

---

प्रभूता भक्तिस्ते यदपि न ममालोलमनस-
स्त्वया तु श्रीमत्या सदयमवलोक्योऽहमधुना ।
पयोदः पानीयं दिशति मधुरं चातकमुखे
भृशं शङ्के कैर्वा विधिभिरनुनीता मम मतिः ॥ ९ ॥

ப்ரபூதா பக்திஸ்தே யதபி ந மமாலோலமனஸஸ்
த்வயா து ஶ்ரீமத்யா ஸதயமவலோக்யே ஹமதுனு ।
பயோத: பானீயம் திஶதி மதுரம் சாதகமுகே
ப்ருஶம் ஶங்கே கைர்வா விதிபிரனுநீதா மம மதி: ॥ 9 ॥

ஆலோல–மனஸ : = சஞ்சலப்படும் மனதையுடைய, மம: = எனக்கு, தே பக்தி: = உன்னிடம் பக்தியானது, ந ப்ரபூதா யத் அபி = மிகுதியாக இல்லையென்றுலும், ஶ்ரீமத்யா = கருணையுடையவளான

த்வயா = உன்னால், அஹம் = நான், ஸதயம் = தயையோடு, அதுனா = இப்பொழுதே, அவலோக்ய = கடாக்ஷிக்கத் தகுந்தவன் ; (எவ்வாறு என்றால்) பயோத: = மழை பொழியும் மேகமானது, சாதகமுகே = சாதகப் புள்ளின் வாயிலே, மதுரம் பானீயம் = இனிய தண்ணீரை, திஶதி = அளிக்கின்றது. கை: விதிபி: = எவ்வகையான கட்டளைகளாலும், மம மதி: = என் மனமானது, அனுநீதா வா = வசக்கப்பட்டதாகுமோ (ஆகமாட்டாது என்று) ப்ருஶம் ஶங்கே = மிகவும் அஞ்சுகிறேன்.

சாதகப்புள் மேகத்தினின்று பொழியும் மழை நீரை எதிர்பார்த்துக்கொண்டு இருக்கும் ; மழைத் திவலை அதின் வாயிலே வந்து விழவேண்டும் ; வானை நோக்கி அங்காந்திருப்பதைத் தவிர வேறொன்றும் கதியில்லை. அதைப்போலவே, எனக்கும் வேறொரு கதியும் இல்லை. மேகத்தைப்போல், நீயும், 'எனக்கு வேறு கதியில்லை' என்பதை யறிந்து, கருணை மழை பொழியும் கடாக்ஷங்களால் நோக்கவேண்டும். சஞ்சலமான என் மனதை எந்த நியமங்களாலும் உன்னையே நோக்கியிருக்குமாறு வசப்படுத்த முடியாது என்று ஐயுறுகிறேன். அதனாலேதான், நீயே அதை உன் கருணைக்குப் பாத்திரமாக்கவேண்டும்.

"யாரை அணுகி எப் பேற்றைப் பெறுவோம் என்று சஞ்சலப்படவேண்டாம் ; தேவியின் பாதங்களையே கதியாகக்கொண்டு இருந்தால், அவளே உன் மனச் சஞ்சலத்தைப் போக்கி, பக்தியைப் பெருக்கி கருணைக்குப் பாத்திரமாக்கும் கருத்துடன் குளிரக் கடாக்ஷிப்பாள்" என்று கூறி, நம்மைத் தேவியிடம் பக்தி செலுத்தும்படி உபதேசிக்கிறார்கள்;

---

कृपापाङ्गालोकं वितर तरसा साधुचरिते
न ते युक्तोपेक्षा मयि शरणदीक्षामुपगते ।
न चेदिष्टं दद्यादनुपदमहो कल्पलतिका
विशेषः सामान्यैः कथमितरवल्लीपरिकरैः ॥ १० ॥

க்ருபாபாங்காலோகம் விதர தரஸா ஸாதுசரிதே
ந தே யுக்தோபேக்ஷா மயி ஶரணதீக்ஷாமுபகதே ।
ந சேதிஷ்டம் தத்யாதனுபதமஹோ கல்பலதிகா
விஶேஷ: ஸாமான்யை: கதமிதரவல்லீபரிகரை: ॥ 10 ॥

**க்ருபாபாங்காலோகம்**=கிருபைபொழியும் கடைக் கண் பார்வையை, **தரஸா**=விரைவிலே, **விதர**=அளிப்பாயாக; **ஸாதுசரிதே**=நன்னடத்தை யுடையவளே! **ஶரண தீக்ஷாம் உபகதே மயி**=சரணம் புகுதல் என்னும் விரதம் பூண்டு (உன்னை) அடைந்த என் விஷயத்தில், **உபேக்ஷா**=உபேக்ஷை செய்வது (அலட்சியமாய்ப் பராமுகமாயிருப்பது), **ந தே யுக்தா**=உனக்குத் தகாது; **கல்பலதிகா**=கற்பகக் கொடியானது, **அனுபதம்**=அடிக்கடி, **இஷ்டம்**=விரும்பிய பொருளை, **ந தத்யாத் சேத்**=கொடாதிருக்குமானால், **ஸாமன்யை: இதரவல்லீபரிகரை**=சாதாரணமான மற்றைக் கொடிகளின் கும்பலைக்காட்டிலும் (கற்பகக் கொடிக்கு), **விஶேஷ:**=தனிச்சிறப்பு, **கதம் அஹோ**=எவ்வாறு?

வேண்டியபோதெல்லாம் உடனுக்குடன் வேண்டிய பொருளை உதவுவதன்றோ கற்பகக் கொடியின் சிறப்பு? நல்லோர்கள் சரண மடைந்தவர்களை உபேக்ஷை செய்வார்களா? நான் உன்னைச் சரண மடைந்தேன்; என்னை இப்பொழுதே கிருபைகூர்ந்து கடாக்ஷித்தருளவேண்டும்.

தன்னை அண்டினவர்களுக்கு விரும்பிய போதெல் லாம் விரும்பியவற்றை அளித்துக் காப்பது கற்பகக்

கொடி ; மற்ற மரங்கள் பருவத்தாலன்றிப் பழுக்க மாட்டாதவை ; மற்ற தேவதைகள் இந்தப்பழமரங் களைப் போன்றவர்கள் ; தேவியோ கற்பகக் கொடி போன்றவள். ஆகையால், எப்பொழுது எது வேண்டு மானாலும் அவளை உபாசித்துப் பெறலாம். முதன் முதலில், அடிக்கடி கிருபாகடாக்ஷத்தை வேண்டிப் பெற்றால், மற்றவைப் பேறுகள் எல்லாம் தாமாகவே நமக்கு வந்துசேரும். ஆகையால், தேவியின் கிருபை யையே சதா வேண்டி நிற்பீர்களாக'' என்று உபதேசிக் கிறார்கள்.

---

महान्तं विश्वासं तव चरणपङ्केरुहयुगे
निधायान्यन्नैवाश्रितमिह मया दैवतमुमे ।
तथाऽपि त्वच्चेतो यदि मयि न जायेत सदयं
निरालम्बो।लम्बोदरजननि कं यामि शरणम् ॥ ११ ॥

மஹாந்தம் விஶ்வாஸம் தவ சரணபங்கேருஹயுகே
நிதாயான்யன்னைவாஶ்ரிதமிஹ மயா தைவதமுமே ।
ததாபி த்வச்சேதோ யதி மயி ந ஜாயேத ஸதயம்
நிராலம்போ லம்போதரஜனனிகம் யாமி ஶரணம் ॥ 11 ॥

உமே = உமாதேவியே! தவ = உன், சரண பங்கே ருஹயுகே = பாத கமலங்கள் இரண்டிலும், மஹாந்தம் விஶ்வாஸம் = அதிகமான நம்பிக்கையை, நிதாய = வைத்து, அன்யத்-தைவதம் = வேறு தேவதை யொன் றும், மயா = என்னால், இஹ = இங்கே, ந ஆஶ்ரிதம் ஏவ = (புகலாக) அடையப் பெறவே யில்லை; ததா அபி = அப்படி யிருந்தும், த்வத்சேத: = உன் மனமானது, மயி = என்னிடம், ஸதயம் = தயையுடையதாக, ந ஜாயேத யதி = ஆகமாட்டாதென்றால், நிராலம்ப: = பற்றுக் கோடு பெறாதவனான நான், கம் = யாரை ஶரணம் யாமி = சரணமடைவேன் ? லம்போதர ஜனனி = விநாயகக் கடவுளைப் பெற்ற தாயே !

தன்னைச் சரண் புகுந்தவர்களுக்கு நேரும் இடையூறுகளை யெல்லாம் நீக்கும் விநாயகக் கடவுளுக்குத் தாயானவளே! உன் குணமன்றோ உன் பிள்ளையிடம் காணப்படுகின்றது! உன்னைப் பற்றுக்கோடாகக் கொண்டு, உன் பாதகமலங்களிலே சரணாகதி செய்து, வேறொரு தெய்வத்தையும் கருதாத என்னிடத்தில் உனது மனதிலே இரக்கம் எழாவிட்டால்; நான் என்ன செய்வேன்? உன்னைத் தவிர என்னைக் காப்பதற்கு வேறு யார் உண்டு ?

உமாதேவியே கதி யென்று உறுதியான நம்பிக்கையோடு சரண்புகுந்தால், வேறு தேவதையினிடம் உன் மனம் செல்கின்றதா என்று பரீக்ஷிப்பதற்காகச் சற்று தயை புரியத் தாமதிப்பது போலத் தோன்றினாலும், அதிசீக்கிரத்திலே அருள்புரியும் விநாயகக் கடவுளுக்குத் தாயாகையால், அவரைக் காட்டிலும் விரைவிலே அருள்புரிவாள் என்று மனதைத் திடப்படுத்திக்கொள்ளவேண்டும் என்று உபதேசிக்கிறார்கள்.

---

अयः स्पर्शे लग्नं सपदि लभते हेमपदवीं
यथा रथ्यापाथः शुचि भवति गङ्गौघमिलितम् ।
तथा तत्तत्पापैरतिमलिनमन्तर्मम यदि
त्वयि प्रेम्णा सक्तं कथमिव न जायेत विमलम् ॥ १२ ॥

அய: ஸ்பர்ஶே லக்னம் ஸபதி லபதே ஹேம பதவீம்
யதா ரத்யாபாத: ஶுசி பவதி கங்கௌகமிலிதம் ।
ததா தத்தத்பாபைரதிமலினமந்தர்மம யதி
த்வயி ப்ரேம்ணா ஸக்தம் கதமிவ ந ஜாயேத விமலம் ॥12॥

ஸ்பர்ஶே = பரிசவேதியிலே, லக்னம் = தங்கியிருக்கும், அய: = இரும்பு, ஸபதி = (அதைத் தொட்ட) உடனேயே, ஹேம பதவீம் = பொன்னின் தன்மையை, லபதே = பெறுகின்றது ; (அதுபோலவும்,) கங்கௌக-

மிலிதம் = கங்கையின் வெள்ளத்திலே கலந்த, ரத்யாபாத: = தெருவிலோடும் (அசுத்த) ஜலம், யதா ஶுசி பவதி = பரிசுத்தமாகின்றது எவ்வாருே, ததா = அவ்வாறே, தத்தத் பாபை: அதிமலினம் = அந்த அந்த பாபங்களாலே அழுக்கேறியதாக, மமஅந்த: யதி = என்னுடைய மனம் ஆகுமாஞலும், த்வயி = உன்னிடம், ப்ரேம்ணு ஸக்தம் = அன்போடு கூடியதான அந்த மனம்; விமலம் = அழுக்கற்றதாக, கதம் இவ = எவ்வாறுதான், ந ஜாயேத = ஆகாதிருக்கும்?

தேவியினிடத்திலே பக்தியிருந்தால் எவ்வளவு பாபியாஞலும் அவனுடைய மனம் பரிசுத்தமாகி விடும். எதுபோல் என்ருல் சாக்கடைநீர் கங்காப் பிரவாகத்தோடு கலந்தால் பரிசுத்தமான கங்கா ஜலமாகிவிடுவது போலவும், இரும்பையும் பொன்ளுக்கும் ஸ்பர்ச தேவியின் ஸ்பர்சத்தால் இரும்பு பொன்ளுவது போலவும்.

பாபங்களையே இடையருது செய்த பாபியாஞலும், தேவியினிடத்திலே மனதைச் செலுத்தத் தொடங்கினல், அம் மனம் தூயதாகி, ஞானவொளி பெற்று, தேவி சதா கோயில் கொள்வதற்குரிய க்ஷேத்திரமாகிவிடும் என்று உறுதி கூறுவேன் என்று தேவியின் முன்னிலையிலே பிரதிக்ஞை செய்கிருர்கள்.

---

त्वदन्यस्मादिच्छाविषयफललाभे न नियम-
स्त्वमज्ञानासिच्छाधिकमपि समर्था वितरणे ।
इति प्राहुः प्राञ्चः कमलभवनाद्यास्त्वयि मन-
स्त्वदासक्तं नक्तंदिवमुचितमीशानि कुरु तत् ॥ १३ ॥

த்வதன்யஸ்மாதிச்சாவிஷயபலலாபே ந நியமஸ்
த்வமஜ்ஞாஞமிச்சாதிகமபி ஸமர் (த்)தா விதரணே ।
இதி ப்ராஹு: ப்ராஞ்ச: கமலபவஞத்யாஸ்த்வயி மனஸ்,
த்வதாஸக்தம் நக்தம்திவமுசிதமீஶானி குரு தத் ॥ 13 ॥

த்வதன்யஸ்மாத்=உன்னைத் தவிர்த்து வேறொருவரிடமிருந்து, இச்சாவிஷய - பல - லாபே=விரும்பிய பொருளாகிய பலனைப் பெறுவதிலே, ந நியம:=உறுதியில்லை;, த்வம் = நீ, அஞ்ஜானும் = அறிவில்லாதவர்களுக்கு, இச்சாதிகம் அபி=அவர்கள் விரும்பியதற்கு அதிகமாகவே, விதரணே=அளிப்பதில், ஸமர் (த்)தா =திறமைவாய்ந்தவள், இதி=என்று, கமலபவனுத்யா: பராஞ்ச:=தாமரையில் உறையும் பிரமன் முதலான பண்டையோர்கள், த்வயி=உன் விஷயமாக, ப்ராஹு: =சொல்கிறார்கள்; தத் மன;=அந்த (என்) மனதை, த்வதா ஸக்தம்=உன்னிடம் ஈடுபட்டதாகவும், நக்தம் திவம் உசிதம்=இரவும் பகலும் (உனக்குப் பொருந்தியதாகவும்) உனக்கு அனுகூலமாகவும், குரு=செய்துகொள், ஈஶானி=ஈசான தேவரின் பத்தினியே!

எம்பெருமாட்டியே! என் மனதை இரவும் பகலும் உனக்கு அனுகூலமாய் உன்னிடத்திலேயே சதா ஈடுபட்டதாகச் செய்யவேண்டும். ஏனென்றால், உன்னலன்றி யாவராலும் கருதிய பொருள் கைகூடுமென்று நிச்சயங் கூறுவதற்கில்லை. "அறியாமையால் அற்பத்தை விரும்பினவர்களுக்கும் அவர்களுடைய விருப்பத்திற்கு அதிகமாகவே கொடுக்கும் ஸ்வபாவமுடையவள் நீ!' என்று உன்னைப்பற்றி பிரமன் முதலான புராதனப் பெரியோர்கள் கூறியிருக்கிறார்கள்.

உனக்கு எது வேண்டும் என்று தெரியாது. எதை வேண்டினையோ அதை யாரை வேண்டினுற் பெறலாம் என்ற அறிவுமில்லை. பிற தேவதைகளையோ மானுடரையோ வேண்டினால், வேண்டிய பொருளைப் பெறுவோம் என்று நிச்சயஞ் சொல்ல முடியாது. அவர்களும் தேவியின் இச்சைப்படியே நடப்பவர்கள் ஆகையால், தாமே ஒன்றையும் கொடுக்க இயலாதவர்கள்; இதை அவர்களே ஒப்புக்கொள்கிறார்கள். ஆகையால் இரவும் பகலும் உன்

மனத்தை தேவிக்கே உரியதாக்கு; அவள் உனக்குத் தேவையானவற்றையெல்லாம் அவ்வப்பொழுது கொடுத்தருளி, நீ மனத்தாலே நினையாத பெரும்பேறு களையும்; உனக்குத் தானாகவே தருவாள்; ஆகையால் சதா தேவியின் அருளையே சிந்தித்திரு என்று உபதேசிக்கிறார்கள்.

---

स्फुरन्नानारत्नस्फटिकमयभित्तिप्रतिफलत्-
त्वदाकारं चञ्चच्छशधरकलासौधशिखरम् ।
मुकुन्दब्रह्मेन्द्रप्रभृतिपरिवारं विजयते
तवागारं रम्यं त्रिभुवनमहाराजगृहिणि ॥ १४ ॥

ஸ்புரன்நானாரத்னஸ்படிகமய-பித்தி-ப்ரதிபலத்—
த்வதாகாரம் சஞ்சச்சஶதரகலாஸௌதஶிகரம் ।
முகுந்த–ப்ரஹ்மேந்த்ர-ப்ரப்ருதிபரிவாரம் விஜயதே
தவாகாரம் ரம்யம் த்ரிபுவனமஹாராஜக்ருஹிணி ॥ 14 ॥

த்ரிபுவன மஹாராஜ-க்ருஹிணி = மூவுலகுக்கும் மகாராஜாவாக விளங்கும் பரமேசுவரனுடைய மனைவியே! **தவ** = உன்னுடைய, **ரம்யம்** = அழகிய, **ஆகாரம்** = மாளிகையானது, **ஸ்புரன் - நானாரத்ன - ஸ்படிகமய-பித்தி-ப்ரதிபலத்-த்வதாகாரம்** = ஒளிவிடுகின்ற பலவகைப்பட்ட இரத்தினங்களாலும் ஸ்படிகக் கற்களாலும் கட்டிய சுவரிலே பிரதிபலிக்கும் உன்னுடைய வடிவத்தை யுடையதாயும், **சஞ்சச்சஶதரகலா-ஸௌதஶிகரம்** = சந்திரனின் இளம்பிறை தாவிச்செல்லும்படியான மாளிகையின் மேற்கட்டியை யுடையதாயும், **முகுந்த-ப்ரஹ்மேந்த்ர - ப்ரப்ருதி-பரிவாரம்** = விஷ்ணு பிரமன் இந்திரன் முதலானவர்களை பரிவாரமாகவுடையதாயும், **விஜயதே** = சிறந்து விளங்குகின்றது.

நீ மூவுலகங்களுக்கும் மகாராஜனுன பரமேச்வரனின் ராணி! யாதலால், உன்னுடைய மாளிகையிலே விஷ்ணு, பிரமன், இந்திரன் முதலானோர் காத்திருப்பார்கள். அந்த மாளிகை சந்திர மண்டலத்தை யளாவியதாயும் நவரத்தினங்களையும் ஸ்படிகக் கற்களையும் இழைத்த சுவர்களிலே உன் நிழலைக்கண்டு, "நீ இங்குற்ருயோ ? அல்லது அங்குற்ருயோ ?" என்று வியப்பார்கள் உன்னை ஸேவிக்கக் காத்திருப்பவர்கள்.

ஸ்ரீபுரத்திலே சிவராஜனுடைய அரண்மனையின் அந்தப்புரத்துத் திருமுற்றத்திலே, தேவியின் வரவை எதிர்பார்த்துக் காத்திருக்குந் தேவ கணங்கள், தேவியின் திருவுருவம் ஸ்படிகங்களும் நவரத்தினங்களும் இழைத்த சுவர்ப் புறங்களிலே தோன்றக் கண்டு, "இதோ வருகிருள், இதோ வருகிருள்" என்று ஆரவாரஞ் செய்வார்கள். ஆனாலும், அத்தகைய பிராட்டியும் உன் மனத்தையே பெருமாளிகையாகக் கொண்டு அங்கே இடைவிடாது வீற்றிருப்பவள் என்று அறிந்துகொண்டு, மனத்தைத் தேவிக்கு ஏற்ற கோயிலாக்குவாய் என்று உபதேசிக்கின்றுர்கள்.

---

निवासः कैलासे विधिशतमखाद्याः स्तुतिकराः
कुटुम्बं त्रैलोक्यं कृतकरपुटः सिद्धिनिकरः ।
महेशः प्राणेशस्तदवनिधराधीशतनये
न ते सौभाग्यस्य क्वचिदपि मनागस्ति तुलना ॥ १५ ॥

நிவாஸ: கைலாஸே விதிஶதமகாத்யா: ஸ்துதிகரா:
குடும்பம்த்ரைலோக்யம் க்ருதகரபுடஸித்திநிகர: ।
மஹேஶ: ப்ராணேஶஸ்ததவனிதராதீஶதனயே
ந தே ஸௌபாக்யஸ்ய க்வசிதபி மனாகஸ்திதுலனா ॥15॥

நிவாஸ: = வாஸஸ்தானம், கைலாஸே = கைலாசத்திலே ; விதி - ஶதமகாத்யா: = பிரமன் இந்திரன் முதலானோர், ஸ்துதிகரா: = துதிப்பவர்கள் ; குடும்பம் = குடும்பமோ, த்ரைலோக்யம் = மூவுலகமும் ஆகும் ; ஸித்திநிகர: = ஸித்திகளின் தொகுதி முழுவதும், க்ருதகரபுட: = உள்ளங்கையிலே வைத்துக்கொள்ளப்பட்டது ; ப்ராணேஶ: = பிராணநாதனோ, மஹேஶ: = பரமேசுவரன், தத் = ஆகையால், அவனிதராதீஶ தனயே = மலையரசனுடைய மகளே ! தே = உன், ஸௌபாக்ய துலனா = செல்வத்திற்கு ஈடு, க்வசித் அபி = எங்குமே, ந மனாக் அஸ்தி = கொஞ்சங்கூட இல்லை.

பர்வத ராஜகுமாரியே ! நீ ஸகல ஸௌபாக்யங்களையுமுடையவள். உனக்கு ஈடானவர் உண்டோ ? இருப்பது கைலாஸத்தில்; பிரமன் இந்திரன் முதலானவர்கள் உன்னைப் புகழ்கிறார்கள் ; பரமேசுவரன் உன் பிராண நாதன். மூவுலகமும் உன் குடும்பம். ஸகல ஸித்திகளும் உன் கையில் உள்ளன. இவ்வளவு பெருமை உனக்கு இருக்கும்போது உன் அடியானான எனக்கு என்ன குறைவு ?

"தாயார் நல்லவள்தான்; ஆனாலும் அவளுக்கு ஸௌபாக்கியம் ஒன்றும் இல்லையென்றால் அவள் என்னை எவ்வாறு போஷித்துக் காப்பாள்?" என்று கவலைப்படாதே. மூவுலகமும் அவளுக்கே குடும்பமாயிருந்தும், அந்தக் குடும்ப பாரத்தை வகிக்கக்கூடிய திறமையும் சௌகரியமும் உள்ளவள் : பிரும்ம தேவன், இந்திரன் முதலானவர்கள் அவள் முன்னே கைகட்டிச் சேவகஞ் செய்கிறார்கள். நவசித்திகளும் அவள் கைவசம் இருக்கின்றன. எல்லாம் வல்ல இறைவனும் அவள்மேற் பிராணனாய் அவளை விட்டுப் பிரியாதிருக்கிறான். ஆகையால், தேவியின்

குடும்பத்தைச் சேர்ந்த நமக்கு யாதொன்றும் குறை யில்லை என்று மனச்சாந்தி பெற்றிருப்பாயாக என்று உபதேசிக்கிறார்கள்.

---

वृषो वृद्धो यानं विषमशनमाशा निवसनं
श्मशानं क्रीडाभूर्भुजगनिवहो भूषणविधिः ।
समग्रा सामग्री जगति विदितैव स्मररिपो-
र्यदेतस्यैश्वर्यं तव जननि सौभाग्यमहिमा ॥ १६ ॥

வ்ருஷோ வ்ருத்தோ யானம் விஷமஶனமாஶா நிவஸனம்
ஶ்மஶானம் க்ரீடாபூர்புஜகநிவஹோ பூஷணவிதி: ।
ஸமக்ரா ஸாமக்ரீ ஜகதி விதிதைவ ஸ்மரரிபோ:
யதேதஸ்யைஶ்வர்யம் தவ ஜனனி ஸௌபாக்ய
மஹிமா ॥ 16 ॥

ஸ்மரரிபோ: = காமனுக்குப் பகைவனான பரமேசு வரனுக்கு, யானம் = வாகனம், வ்ருத்த: வ்ருஷ: = கிழமாடு, அசனம் = ஆகாரம், விஷம் = விஷம், நிவ ஸனம் = ஆடை, ஆஶா = திசை, (ஆடையொன்றும் இல்லை); க்ரீடாபூ: = விளையாடுமிடம், ஶ்மஶானம் = சுடுகாடு; பூஷணவிதி: = அணிவகை, புஜக–நிவஹ:= பாம்புகளின் தொகுதி; (இவ்வாறு), ஸமக்ராஸாமக்ரீ = எல்லா உடைமைகளும் (அமைந்துள்ளன) என்பது, ஜகதி = உலகத்திலே (எல்லோராலும்), விதிதா ஏவ = நன்கறியப்பட்ட விஷயமே, ஏகஸ்ய = இவருக்கு, ஐஶ் வர்யம் யத் = ஈசுவரத்தன்மை இருப்பது என்பது, ஜனனி = தாயே! தவ = உன், ஸௌபாக்ய-மஹிமா = நல்லதிர்ஷ்டத்தின் பெருமைதான்.

பரமேசுவரனுக்கு ஒன்றும் இல்லை; குடியிருக்க வீடில்லை; உண்ண உணவில்லை; உடுக்க உடையில்லை; ஏறிச்செல்ல ஒரு கிழ மாடுதான் உண்டு, அணிகளும் பாம்புகளே இப்படியிருந்தும் எல்லோருக்கும் கடவுளாகும் பெருமை அவருக்கு இருப்பது உன் அதிர்ஷ்டத்தினாலே தான்.

"உடுக்க உடையின்றி, உண்ண உணவின்றி, இருக்க இடமின்றித் திரிகின்ற அகதியும் தேவியின் கடாக்ஷத்தைப் பெற்று பரமேசுவரனுகிருன்" என்பதைக் கண்டு, தேவியையே கதியாகக் கொள்ளுங்கள்" என்று உபதேசிக்கிருர்கள்.

---

अशेषब्रह्माण्डप्रलयविधिनैसर्गिकमतिः
श्मशानेष्वासीनः कृतभसितलेपः पशुपतिः ।
दधौ कण्ठे हालाहलमखिलभूगोलकृपया
भवत्याः संगत्याः फलमिति च कल्याणि कलये ॥ १७

அஶேஷப்ரஹ்மாண்டப்ரலயவிதிநைஸர்கிகமதி:
ஶ்மஶானேஷ்வாஸீன: க்ருதபஸிதலேப: பஶுபதி:।
ததௌ கண்டே ஹாலாஹலமகிலபூகோலக்ருபயா
பவத்யா:ஸங்கத்யா: பலமிதி ச கல்யாணி கலயே ||17||

அஶேஷ - ப்ரஹ்மாண்ட - ப்ரலயவிதி - நைஸர்கிகமதி;= எல்லாப் பிரும்மாண்டங்களையும் அழிக்குங் கார்யத்திலேயே இயற்கையாய்ப் பற்றுதலுடைய மனத்தையுடையவராய், ஶ்மஶானேஷு = சுடுகாடுகளில், ஆஸீன = வீற்றிருப்பவராய், க்ருதபஸிதலேப:= அந்த சுடுகாடுகளிலுள்ள சாம்பலைப் பூசிக்கொண்டவராய், பஶுபதி:=(மந்த புத்தியுள்ள இடையனுய்த் தோன்றுகிற) பசுபதியானவர், அகில-பூகோல-க்ருபயா=(தாம் இயற்கையாய் எந்த பிரும்மாண்டங்களை அழித்துச் சுடலையாக்கி அச்சுடலைப் பொடியைப் பூசிக்கொண்டிருக்கிருரோ, அந்த எல்லா பூமண்டலங்களின் மீதும் கிருபை கொண்டு, ஹாலாஹலம்= ஆலகால விஷத்தை, கண்டே=கழுத்திலே, ததௌ= தரித்தாரோ, (தத்= அது) பவத்யா:= தங்களுடைய, ஸங்கத்யா:பலம்= சேர்க்கையின் பயன்,இதி(ச)= என்று தான், கல்யாணி = மங்களஸ்வரூபியே! கலயே=(நான்) கருதுகிறேன்.

தேவி மங்கள ஸ்வரூபி. அவள் பரமேசுவரருடைய திருமேனியில் ஒன்றாகி யிருக்கிறாள். அதனாலே தான், இயற்கையாக எல்லாவற்றையும் அழிக்கும் ஸ்வபாவமுடைய பரமேசுவரர் எல்லாவற்றையும் காக்குந் தொழிலிலே ஈடுபட்டு தேவியின் கிருபையை தம்முடையதாக்கிக் கொண்டு, உலகங்களை அழிப்பதற்குக் கிளம்பிய ஆலகாலவிஷத்தைத் தம்முடைய கழுத்திலே அமைத்துக் கொண்டிருக்கிறார். தேவி இல்லையானால், தனிப் பரமசிவனுக்கு கருணை ஏது?

''நாம் செய்யும் பாபங்களைக் கண்டு, பரம்பரன் உருத்திராகாரத்தை மேற்கொண்டு நம்மை அழித்து விடுவான்'' என்று அஞ்சாதே! தேவியின் சரணங்களிலே பக்தி செய்தால், அவள் ''ஆலகால விஷத்தையும் கழுத்திலே அடக்கிக்கொண்டு தேவாசுரர்களைக் காத்த நீங்கள் என்னுடைய பக்தன்மீது சீறுவது தகாது'' என்று கூறுவாள். ஆகையால், இன்றே பக்தி செய்யத் தொடங்குங்கள்'' என்று உபதேசிக்கிறார்கள்.

---

त्वदीयं सौन्दर्यं निरतिशयमालोक्य परया
भियैवासीद्गङ्गा जलमयतनुः शैलतनये ।
तदेतस्यास्तस्माद्वदनकमलं वीक्ष्य कृपया
प्रतिष्ठामातन्वन्निजशिरसि वासेन गिरिशः ॥ १८ ॥

த்வதீயம் ஸௌந்தர்யம் நிரதிஶயமாலோக்ய பரயா
பியைவாஸீத் கங்கா ஜலமயதனு: ஶைலதனயே ।
ததேதஸ்யாஸ்தஸ்மாத் வதனகமலம் வீக்ஷ்ய க்ருபயா
ப்ரதிஷ்டாமாதன்வன் நிஜஶிரஸி வாஸேன கிரிஶ: ॥ 18 ॥

ஶைலதனயே=பர்வத குமாரியே, த்வதீயம்=உன்னுடைய நிரதிஶயம் ஸௌந்தர்யம்=எல்லை கடந்த வடிவழகை, ஆலோக்ய=நன்ருய்க் கண்டு கொண்டு கங்கா=(உன்னுடன் பிறந்த) கங்கையானவள், பரயா பியா=மிகுந்த பீதியாலே ஜலமயதனு:=(வேர்த்து விருவிருத்து) நீராகி விட்ட உடலை யுடையவளாய் ஆஸீத்=ஆனுள். தஸ்மாத்=அதனுல் ததேதஸ்யா:= அப்பேர்ப்பட்ட இவளுடைய வதன-கமலம்=முகமாகிய தாமரையை க்ருபயா=கிருபையோடு வீக்ஷ்ய= பார்த்து கிரிஶ:=கிரிசன் என்னும் பெயரையுடைய உன் கணவன், நிஜஶிரஸி=தன்னுடைய தலையிலே வாஸேன=வஸிப்பதால், ப்ரதிஷ்டாம்=(அச்சம் நீங்கினவளாய்) நிலைபெற்றிருப்பதை, ஆதன்வத்=செய்து கொடுத்தார்.

மேலுள்ள சுலோகத்திலே பரமேசுவரருடைய கிருபை தேவியின் சேர்க்கையாலேதான் என்று கூறி, "அந்த தேவியின் ஸௌந்தர்யத்தைக் கண்டு, மலையரசனின் பெண்ணுய்ப் பிறந்தும் கங்கை அச்சத்தால் நீராய் உருகிவிட்டாள். அவளைத் தேற்றிக் கீழே விழுந்து அலையாதபடி பரமசிவனுடைய சிரசிலே என்றும் நிலைத்து, நிற்கும்படியாகச் செய்தது உன்னுடைய கருணையே" என்று கூறுகிருர் இந்த சுலோகத்தாலே.

தேவியானவள் தன்னுடைய பெருமைகளைக்கண்டு அஞ்சி அலமரும் மாந்தர்களையும் அச்சத்தைப் போக்கித் தன்னினும் சிறந்த நிலையை அவர்களுக்கு அருள வேண்டும் என்று பரமசிவனிடம் கடைக்கண்ணுலே தெரிவிக்குந் தன்மையுடையவள்" என்பதை கங்கா தேவி பெற்ற சிறப்பைக் கூறி விளக்குகிருர்கள்.

—

विशालश्रीखण्डद्रवमृगमदाकीर्णघुसृण-
प्रसूनव्यामिश्रं भगवति तवाभ्यङ्गसलिलम् ।
समादाय स्रष्टा चलितपदपांसून्निजकरैः
समाधत्ते सृष्टिं विबुधपुरपङ्केरुहदृशाम् ॥ १९ ॥

விஶாலஶ்ரீகண்டத்ரவம்ருகமதாகீர்ணகுஸ்ருண
ப்ரஸூனவ்யாமிஶ்ரம் பகவதி தவாப்யங்கஸலிலம் ।
ஸமாதாய ஸ்ரஷ்டா சலிதபதபாம்ஸூன் நிஜகரை:
ஸமாதத்தே ஸ்ருஷ்டிம் விபுதபுரபங்கேருஹத்ருஶாம் ॥ 19 ॥

விஶால-ஶ்ரீகண்டத்ரவ-ம்ருகமதாகீர்ண-குஸ்ருண-ப்ரஸூன-வ்யாமிஶ்ரம் = மிகச் சிறந்த செஞ்சந்தனக் குழம்பு, கஸ்தூரி, குங்குமம், புஷ்பங்கள் இவற்ருேடு கலந்த, தவ அப்யங்க-ஸலிலம் = உன்னுடைய மங்கள ஸ்நான ஜலத்தை, ஸமாதாய = எடுத்து வைத்துக் கொண்டு, பகவதி = பகவதியே! ஸ்ரஷ்டா = ஸ்ருஷ்டி கர்த்தாவான பிரமன், சலிதபதபாம்ஸூன் = (உன்) பாதங்களினின்று நீங்கிய தூளிகளைக் கொண்டு, விபுதபுர-பங்கேருஹ-த்ருஶாம் = தாமரைக் கண்களை யுடைய தேவலோகத்து கன்னிகைகளின் ஸ்ருஷ்டிம் = சிருஷ்டியை நிஜ-கரை: = தன் கைகளாலேயே ஸமாதத்தே = செய்கிருன்.

பேரழகு வாய்ந்தவர்களென்று கொண்டாடப் பெறும் அப்ஸரஸ்களை பிரமன் எவ்வாறு படைத்தான்? உன்னுடைய பாதங்களிலேயிருந்ததால் அழகு பெற்றவையான தூளிகளை, உன்னுடைய திருமேனியின் ஸ்பர்சம்பெற்றுச் சிறந்த சந்தனம், கஸ்தூரி, குங்குமம், புஷ்பம் இவைகளைக்கொண்ட திருமஞ்சன ஜலத்தைக் கொண்டு, உன்னுடைய ஸ்பர்சம்பெற்றவை என்ற ஞாபகத்தோடே, தன் கைகளாலே பிசைந்து, அவற்றை அப்ஸரஸ்களாகப் படைத்தான்; அதனலன்ருே அப்ஸரஸ்கள் ஸௌந்தர்யமுடையவர்கள் ஆனர்கள்.

"தேவியின் ஸ்பர்சம் பெற்ற திருமஞ்சன நீர் தூளி, பூ முதவியவை பிரும்மாவாலேயே கொண்டாடப் பெற்று அப்ஸரஸ்களாகப் பிறக்கின்றன என்றால், தேவி என்றும் வீற்றிருக்கும் ஆலயமாக அமைத்துக் கொண்ட உன்னுடைய மனம் பெருப்பேறு பெறுவது உறுதியன்றோ? ஆகையால் உன் மனத்தை தேவியின் பாதபீடமாக்கிப் பிறவிப் பெருங்கடலை நீந்துவாயாக" என்று உபதேசிக்கிறார்கள்.

---

वसन्ते सानन्दे कुसुमितलताभिः परिवृते
स्फुरन्नानापद्मे सरसि कलहंसालिसुभगे
सखीभिः खेलन्तीं मलयपवनान्दोलितजले
स्मरेद्यस्त्वां तस्य ज्वरजनितपीडाऽपसरति ॥ २० ॥

வஸந்தே ஸானந்தே குஸுமிதலதாபி: பரிவ்ருதே
ஸ்புரன்நானாபத்மே ஸரஸி கலஹம்ஸாலிஸுபகே |
ஸகீபி: கேலந்தீம் மலயபவனாந்தோலிதஜலே
ஸ்மரேத்யஸ்த்வாம் தஸ்ய ஜ்வரஜனிதபீடாபஸரதி ॥ 20 ॥

ஸானந்தே = ஆனந்தம் நிறைந்த வஸந்தே = வஸந்த காலத்திலே, குஸுமிதலதாபி: பரிவ்ருதே = பூத்த பூக்கொடிகளாலே சூழப்பெற்றதும் ஸ்புரன்-நானா பத்மே = பலவிதத் தாமரைகள் ஒளிருவதும் கல ஹம்ஸாலி-ஸுபகே = இனிய ஸ்வரத்தையுடைய ஹம்ஸங்களின் வரிசைகளால் அழகுபெற்றதும் மலய பவனாந்தோளித ஜலே = மலயமலையினின்று வீசுந் தென்றலாலே அலைவீசுகிற ஜலத்தையுடையதுமான ஸரஸி = குளத்திலே ஸகீபி: = தோழிகளுடன் கேலந்தீம் = (நீர் விளையாட்டு) விளையாடுகின்ற த்வாம் = உன்னை ய: எவன் ஸ்மரேத் = நினைப்பானோ தஸ்ய = அவனுக்கு ஜ்வர-ஜனிதபீடா = ஜ்வரத்தால் உண்டான நோவு அபஸரதி = நீங்கிப்போகின்றது.

நான்கு பக்கமும் பூங்கொடிகளாலே சூழப்பெற்று ஒரு தாமரையினின்று மற்றொரு தாமரைக்கு கூவிக் கொண்டு செல்லும் ஹம்ஸங்களால் அழகியதாக விளங்கும் தாமரைக் குளத்திலே தென்றல் வீசி மெல்லலைகளை எழுப்ப, அங்கே தோழிகளோடு சென்று வஸந்த விழாக் கொண்டாடி விளையாடுபவளாகத் தேவியைத் தியானிப்பவர்களுக்கு, ஜ்வரம் முதலிய நோய்களும் ஸம்ஸார தாபங்களும் தாமே விலகிவிடு கின்றன. ஆதலால் தேவியை இந்தப் பிரகாரம் நாம் என்றும் தியானம் செய்துகொண்டு இன்புற்றிருப் போமாக.

முடிவுரையாக, " மனத்தை ஒரு பெருங்குளமாக்கி அங்கே தேவியைத் தோழிகளோடு நீர்விளையாட்டிலே இன்புறும்படி செய்துகொண்டால், அவளுடைய குளிர்ந்த கடாக்ஷங்களாலே ஸம்ஸார வெக்கை தவிர்ந் தவர்களாகப் பேரின்பத்தைப் பெற்று விளங்கலாம். வாருங்கள்" என்று நமக்கு உபதேசஞ் செய்கிறார்கள்.

इति श्रीमत्परमहंसपरिव्राजकाचार्यस्य श्रीगोविन्दभगवत्पाद-
शिष्यस्य श्रीमच्छंकरभगवतः कृतौ आनन्दलहरी संपूर्ण ॥

இவ்வாறு ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜகாசா யர்களான ஸ்ரீ கோவிந்த பகவத்பாதர்களின் சிஷ்யர் களான ஸ்ரீ சங்கரபகவானுடைய நூலிலே **ஆனந்த லஹரீ** முற்றுப்பெற்றது;

ओं तत् सत्

ஓம் தத் ஸத்.

## எமது சொந்த ப்ரசுரங்கள் (Contd.)

| | | ரூ. ப. |
|---|---|---|
| 23. | ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமம் த்ருசதி, அஷ்டோத்ர சதநாமாவளியும் ... | 0 80 |
| 24. | ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி அஷ்டோத்ரம் ... | 0 31 |
| 25. | தர்ச தர்ப்பணம் ... | 0 20 |
| 26. | ப்ரேம கலாவத்யம் .... | 1 50 |

---

## ஸ்ரீ பாலா திருபுரஸுந்தரீ படம்

விலை ரூ. *1-75* தபால் சிலவு ரூ. *1-00*

ஸ்ரீமத் சங்கர பகவத்பாதர்கள் அவர்களால் இயற்றப்பட்டுள்ள அநேக க்ரந்தங்களில் ஒன்ருனதும், லோகமாதாவான பராசக்தியைக் குறித்து ஸ்துதிக்கப்பட்டதுமான 100 ச்லோகங்கள் கொண்ட "ஸௌந்தர்யலஹரியில்" 8வது, 92வது சுலோகங்களில் ஆதி சங்கரர் தேவியை எப்படி வர்ணித்திருக்கிருரோ அதன் பிரகாரம் இப்படம் எழுதப்பட்டுள்ளது.

இந்தப் படம் 8 கலர்களில் லித்தோ பிரிண்ட்டில் அச்சிடப்பட்டிருக்கிறது.

---

| | ரூ. ப. |
|---|---|
| ஸ்ரீ ஜகன்மாதா லலிதா பரமேஸ்வரி படம் .... | 0 75 |
| சுப்ரஹ்மண்ய மஹாயந்த்ரம் ... | 0 25 |
| ஆதிசங்கரர் காஞ்சி காமகோடி படம் ... | 1 00 |
| காமாக்ஷி படம் ... | 0 25 |

கிரி பிரஸ், திருவல்லிக்கேணி, சென்னை-5.